# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Friday, the 25th August 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at two of the clock, the Deputy Speaker (SRI. B. BHAKTAVATSALU NAIDU) in the Chair.

*Note.*—**[An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## I. CONDOLENCE RESOLUTION REGARDING DEMISE OF SRI A. VEDARATHNAM PILLAI, M.L.A.

DEPUTY SPEAKER : I regret to announce to the House the passing away of Sri A. Vedarathnam Pillai, M.L.A., yesterday (24th August 1961) at 2-10 p.m., at the General Hospital. I now request the Hon. the Leader of the House to move the Condolence Resolution.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்னொரு துக்ககரமான நிகழ்ச்சி நம்முடைய சட்ட சபைக்கு ஏற்பட்டு இருக்கிறது. தாங்கள் அறிவித்ததுபோல் நமது மதிப்பிற்கும், அன்பிற்கும் உரிய நண்பர் ஸ்ரீ. வேதரத்னம் பிள்ளை அவர்கள் நேற்று ஆஸ்பத்திரியில் மரணமடைந்தார். இந்தத் தீர்மானத்தை இந்த சட்டசபை முன் நான் வைக்கிறேன்.

" This House places on record its deep sense of sorrow at the sad and sudden demise of Sri A. Vedarathnam Pillai, M.L.A., at 2-10 p.m., on the 24th August 1961 and conveys its deep sense of sympathy to the members of the bereaved family."

ஸ்ரீ வேதரத்தினம் பிள்ளை அவர்கள் சுதந்திர இயக்கத்தில் ஈடுபட்டு எவ்வளவு பெரிய பணியை ஆற்றினர் என்பது நாம் எல்லோரும் அறிவோம். தமிழ்நாடு சுதந்திர இயக்க வரலாறு எழுதப்படுகிற காலத்தில் ஸ்ரீ. வேதரத்னம் பிள்ளை எடுத்துக்கொண்ட பங்கு அதில் பெரிய பகுதியாக இருக்குமென்று நான் நம்புகிறேன். 1929-ம் வருஷத்திலே முதன் முதலிலே தமிழ்நாட்டில் காங்கிரஸ் மாநாடு கூடியபொழுது அவர் வரவேற்புக் கமிட்டியின் காரியதரிசியாக இருந்தார். அதற்குப்பின் 1930-ம் வருஷத்தில் உப்பு சத்தியாக்கிரகம் நடந்தபொழுது வேதாரண்யத்திற்கு ஸ்ரீ ராஜா ஜி அவர்கள் தலைமையின் கீழ் தொண்டர் படையை அழைத்துச் சென்றதும் எல்லோருக்கும் ஞாபகம் இருக்குமென்று நினைக்கிறேன். இந்த இயக்கம் வேதாரண்யத்தில் வெற்றி பெற்றதற்கு முக்கிய காரணமாக இருந்தவர் ஸ்ரீ வேதரத்னம் பிள்ளை அவர்கள்தான். அதன்காரணமாகத்தான் அவர்களுக்கு சர்தார் என்ற பட்டத்தை வழங்கினர்கள். அப்போதிலிருந்துதான் அவர்களை சர்தார் வேதரத்னம் பிள்ளை என்று அழைத்தார்கள்.

[Sri C. Subramaniam] [25th August 1961

அவர்களை நான் 25 ஆண்டு காலமாக அறிவேன். அதற்கு முன்பும் கூட இருக்கலாம். நாங்கள் எல்லோரும் அவர்களை அண்ணாச்சி என்று அழைப்பது வழக்கம். அவ்வளவு அன்புடனும், பரிவுடனும் அவர்கள் எல்லோரிடத்திலும் நடந்து கொள்வார்கள். அதனால்தான் அவர்களை அண்ணாச்சி, அண்ணாச்சி என்று அழைப்பார்கள். அவர்களுடைய தேசபக்தி என்றும் மாறாத தேச பக்தி. அவர் தன்னுடைய லட்சியத்தில் உறுதியான நம்பிக்கை கொண்டவர். அவர்களுடைய லட்சிய உறுதியை எவ்வளவு பெரியவராக இருந்தாலும், வேண்டியவர்களாக இருந்தாலும் அவர்களை கலைக்க முயன்றாலும் மாறாத உறுதியைப் பெற்றிருந்தார். சர்தார் வேதரத்னம் பிள்ளை அவர்களுடைய கடமை உணர்ச்சியின் காரணமாகத்தான் அவர்களுக்கு இவ்வளவு சீக்கிரமாக மரணம் ஏற்பட நேர்ந்தது என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். சட்டசபை அங்கத்தினர்கள் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்பதற்கு அவர்கள் ஒரு உதாரணமாக விளங்கினார்கள். தவிர்க்க முடியாத காரியம் இருந்தாலொழிய சட்டசபைக் கூட்டத்திற்கு வராமல் இருக்கக்கூடாது என்ற உறுதி கொண்டவர். அவர்கள் காலை 8½ மணியிலிருந்து 1½ மணி வரை முழு நேரமும் இந்தச் சட்டசபையிலேயே உட்கார்ந்து இருக்கவேண்டுமென்று உறுதியையும் கொண்டவர்.

அவர்களுக்கு இம்மாத ஆரம்பத்திலேயே இருதய அடைப்புக் கோளாறு ஏற்பட்டது. கொஞ்சம் சிகிச்சையும் பெற்று வந்தார். ஓரளவு குணம் பெற்றார். சட்டசபைக் கூட்டத்திற்குப் புறப்படுவதற்கு முன்பு விட்டிலேயே இருந்து ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று டாக்டர் சொன்னார். அதற்கு அவர் "இப்போது எனக்கு உடம்பு நன்றாக இருக்கிறது. சட்டசபை கூடும்போது நான் போகாமலிருந்தால் என் கடமையிலிருந்து தவறியவன் ஆவேன். அப்படிக் கடமை செய்துகொண்டே உயிர்விட நேர்ந்தால் அதைப்பற்றி எனக்கு சந்தோஷம்தான்", என்று சொன்னார். இங்கு வந்தபிறகும் கூட அவர்களைப் பல நண்பர்கள் "கேள்வி போடவேண்டாம், பேச வேண்டாம், ஆஸ்பத்திரியில் போய் சிகிச்சை பெறுங்கள்" என்று சொன்னார்கள். அதற்கு அவர்கள் "எனக்கு ஒன்றும் பலவீனம் தோன்றவில்லை, அதனால் ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டிய நிலைமை ஏற்படவில்லை. சட்டசபைக்கூட்டம் நடக்கும்பொழுது அங்கு போகாமல் இருப்பது என்னுடைய கடமையிலிருந்து தவறுவதாகும் என்று அவர்கள் அப்போதும் கடமையைப் பற்றியே சொல்லிக்கொண்டு இருந்தார். அப்படி அவர்கள் ஓய்வு எடுத்துக்கொண்டிருந்தால் ஓரளவுக்கு அவர்கள் குணம் பெற்று இருக்கமுடியும். ஆனால் அவர் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று பலர் வற்புறுத்தியும் அதைக் கேட்காமல் கடமையை செய்யவேண்டுமென்று நினைத்து சட்டசபைக் கூட்டத்திற்கு வந்த காரணத்தினால், மேலும் அவர்கள் நோய்வாய்ப்பட்டு உயிர் நீக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. எவ்வாறு அவர்கள் தேச பக்தியிலும், கடமை உணர்ச்சியிலும்

இருந்தார்களோ. அதேமாதிரித்தான் மதப்பற்றிலும் அவர்களுக்கு தளராத நம்பிக்கை அமைந்திருந்தது. நேர்மைக்கும், ஒழுங்கிற்கும், கட்டுப்பாட்டிற்கும் அவர்கள் ஒரு எடுத்துக் காட்டாக விளங்கினர்கள். அவர்கள் அனாதைகளாய் விடப்பட்ட ஆயிரக்கணக்கான பெண்களின் வாழ்வு வளம் பெறுவதற்காக ஒரு கன்னியா குருகுலத்தை வேதாரணயத்தில் நடத்திவந்தார்கள் என்பதை யாரும் மறக்க முடியாது. கன்யா குருகுலத்தில் படித்து நல்வாழ்வு பெற்ற பெண்கள் அவர்களை என்றென்றும் வாழ்த்துவார்கள் என்பதில் சந்தேகமில்லை. அவர்களுடைய ஆத்மா சாந்தியடைய எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக் கொண்டு இந்தத் தீர்மானத்தை சபை ஏக மனதாக ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **SRI V. K. RAMASWAMY MUDALIYAR** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கனம் நிதியமைச்சர் அவர்கள் கொண்டு வந்த தீர்மானத்தை நானும் ஆமோதிக்கிறேன். இந்த ஒருவார காலத்திலேயே மறுபடியும் இம்மாதிரியான ஒரு தீர்மானம் சட்டசபை முன் கொண்டுவரவேண்டிய நிலைமை ஏற்பட்டதற்கு நான் மிகவும் வருந்துகிறேன். சர்தார் வேதரத்னம் பிள்ளை அவர்கள் நல்ல திடகாத்திரமாகவும், நல்லபடியாகவும் இருந்தார். இரண்டு தினங்களுக்கு முன்தான் நான் பத்திரிகையிலே படித்தேன், திடீரென்று ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார் என்று. இருந்தபொழுதிலும் இவ்வளவு சீக்கிரம் மரணம் ஏற்படுமென்று யாரும் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். அவர்களுடன் நான் கொஞ்ச காலமாக நெருங்கிப் பழகக் கூடிய சந்தர்ப்பம் இருந்தது. அவர் நல்ல உத்தமர். காந்தி அடிகளின் கொள்கைகளைப் பின்பற்றி சத்தியாக்கிரக இயக்கத்தில் ஈடுபட்டு, சுதந்திரப் போராட்டத்தில் எவ்வளவு தூரம் கஷ்டப்படவேண்டுமோ அவ்வளவு தூரம் கஷ்டப்பட்டு அவர்கள் தனது உடல் பொருள் ஆவி எல்லாவற்றையும் இழந்தார்கள். "சால்ட் சத்தியாக்கிரகத்தில்" ஈடுபட்டபோது அவரது உப்பளங்கள் எல்லாம் சர்க்காரால் பறிமுதல் செய்யப்பட்டன. எதற்கும் அஞ்சாமல் சுதந்திரப் போராட்டத்தில் பங்கு எடுத்துக் கொண்டு நம் நாட்டிற்கு நல்ல பணியைச் செய்து வந்தார்கள். இத்தீர்மானத்தை எல்லோரும் ஏகமனதாக ஏற்றுக்கொள்ளவேண்டும் என்ற கருத்தை தெரிவித்துக்கொள்வதோடு அவரது ஆத்மா சாந்தியடையப் பிரார்த்திக்கிறேன்.

**SRI K. ANBAZHAGAN** : சட்ட மன்றத் துணைத்தலைவர் அவர்களே, நம்மோடு ஒரு வழிகாட்டியாக இருந்த சர்தார் வேதரத்னம் அவர்களை எதிர்பாராத வகையில் இழந்து அந்த வேதனையோடு கூடியிருக்கிற இவ்வேளையில் இந்தப்பேரவையின் ஆழ்ந்த வருத்தத்தில் நானும் பங்கு கொள்கிறேன். சட்டமன்ற உறுப்பினர்கள் அனைவரும் சர்தார் வேதரத்னம் அவர்கள் தங்களுக்கெல்லாம் ஒரு எடுத்துக்காட்டாக விளங்கினர் என்று கருதுகிற அளவுக்கு எல்லா

வகையிலும் ஊக்கத்தோடும், உறுதியோடும் அவர்கள் இங்கிருந்து பணியாற்றினார்கள். மறைந்த அவர் இன்றையதினமும் நமது உள்ளத்தில் மறையாத அளவிற்கு நிலைபெற்றிருக்கிறார்கள் என்று தான் நான் கருதுகிறேன். அவர்கள் உடல் தளர்ந்து மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள் என்ற செய்தி வந்தவுடன், நல்ல உடல் வலிவு பெற்ற அவர்கள் நிச்சயம் திரும்ப இங்கு வருவார்கள் என்ற எண்ணத்தில் சில மணி நேரம் கழித்துச் சென்று பார்க்கலாம் என்று கருதி இருப்பதற்குள், நமது முதல் அமைச்சர் அவர்கள் 'இப்பொழுது பிறரை உணரமுடியாத நிலையில் அவர்கள் மயக்கத்தில் இருக்கிறார்கள்' என்று தெரிவித் தார்கள். பின்னர் இரண்டு மணி நேரத்திற்குள் திடீரென அவர்கள் மறைந்து விட்டார்கள். அவர்கள் அடிக்கடி எடுத்துச் சொல்லும் திருக்குறளில் வள்ளுவர் கூறியிருப்பது போல்,

"நெருந லுளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு"

என்ற ஒரு பெருமைதான் நம் உலகிற்கு உண்டுபோலும் என்று எண்ணிக் கலங்க வேண்டிய அளவிற்கு இன்றையதினம் அவர்கள் மறைந்திருக்கிறார்கள். நமது சட்டமன்ற ஆளும் கட்சித் தலைவர் அவர்கள் தெரிவித்த வகையில் இந்த நாட்டின் விடுதலை இயக்கத் தில் ஒரு பெரிய தூணை, ஒரு மாவீரனை அவர்கள் இருந்தார்கள். அவருக்குச் செலுத்த வேண்டிய வீர வணக்கத்தைத்தான் இன்று நாம் செலுத்துகிறோம் என்று நான் மனமாரக் கருதுகிறேன். அவர்கள், கொள்கையில் உறுதியாக இருந்தார்கள். உதாரண மாகச் சட்டை அணிவதில்லை என்ற உறுதி கொண்ட அவர்கள் கடைசி வரையில் சட்டை அணியாமல் குளிர் தாக்கினாலும், வெயில் சுடினும் மேல் துணியோடு மட்டும் தான் சட்டை போடாது வாழ்க்கை நடத்தினார்கள் என்றால் எத்தகைய துன்ப மும் அவரது உள்ள உறுதியை மாற்றக் கூடியதாகயிருந்ததில்லை. அவருக்கு முறைப்படி ஒரு மகன் தான் என்றிருந்தாலும், அவர் களுக்கு ஏராளமான மக்கள் உண்டு என்று வேதாரண்யமும், தமிழ்நாடும் சொல்லக்கூடிய அளவில் பெற்றெடுத்த தந்தையைப் போல் பல குழந்தைகளை வளர்த்துத் தந்திருக்கிறார்கள். கொள்கை உறுதியோடு, வள்ளுவர் காட்டிய வழி நடந்தவரை நாம் இழந்தது, தமிழ்நாட்டிற்கு ஒரு பேரிழப்பாகும். உண்மை யில் ஒரு பழைய தலைமுறையை இன்று நாம் இழந்து வருகிறோம் என்று எண்ணும் வகையில் நமது சட்டமன்ற தலைவர் அவர்களை யும், இப்பொழுது நமது மதிப்பிற்குரியவரும் எல்லாக் கட்சியின ரும் பாராட்டத்தக்க சிறப்பு மிக்கவரும் எல்லோரிடத்திலும் அன்பு காட்டி வந்தவரும், பிறரது மனக்கசப்பிற்கு இடம் கொடுக் காதிருந்தவருமான தமிழர் தலைவர்களில் ஒருவரை இழந்ததில் சட்டமன்றத்திற்குள்ள ஆழ்ந்த துக்கத்தில் நானும், என் கட்சி யைச் சார்ந்தவர்களும் எங்கள் துயரினை தெரிவித்துக்கொள் கிறோம் என்று கூறிக்கொண்டு என் உரையை முடிக்கிறேன், வணக்கம்.

25th August 1961]

SRI M. KALYANASUNDARAM: உதவி சபாநாயகர் அவர்களே, டாக்டர் கிருஷ்ண ராவ் அவர்களை இழந்து நமது துக்கம் தணிவதற்குள்ளாகவே நண்பர் வேதரத்னம் அவர்களை இழந்து நாம் இன்னும் அதிக துக்கத்திற்கு ஆளாக நேர்ந்தது குறித்து நான் மிகவும் வருத்தப்படுகிறேன். வேதாரண்யம் என்ற ஊரும், வேதரத்னம் என்ற பெயரும் சுதந்திரப் போராட்டச் சரித்திரத்தில் நிச்சயமாக இடம் பெறும். 1929-ல் லாகூர் காங்கிரஸில் நமது லட்சியம் பூர்ண சுயராஜ்யம் என்ற தீர்மானத்தை நிறைவேற்றிய பிறகு அந்தப் பூர்ண சுயராஜ்யத்தை அடைவதற்காக நமது நாட்டிலே ஒரு பெரிய இயக்கம் காந்திஜியின் தண்டி யாத்திரையிலிருந்து ஆரம்பமாகியது. 1930-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ம் தேதி தண்டியில் காந்திஜி சட்டபூர்வமாக உப்பு சட்டத்தை மீறியபோது அன்றில்லாவிடினும் பின் ஒரு மாதம் கழிந்து கைது செய்யப்பட்டார்கள். அதைத் தொடர்ந்து கிட்டத்தட்ட அதேபோன்று தமிழ் நாட்டிலும், நான் பிறந்த நகரமாகிய திருச்சி நகரத்திலிருந்து ராஜாஜி அவர்களின் தலைமையின் கீழ் ஒரு படை புறப்பட்டது கால்நடையாக. அன்று வாலிபர்களாக இருந்த என் போன்றவர்கள் தேச பக்தி கொள்ளவும், அன்னிய ஆட்சியை வெறுக்கவும் செய்தது அந்த நிகழ்ச்சிதான். திருச்சியிலிருந்து புறப்பட்டு வேதாரண்யத்திற்குக் கால்நடையாக நடந்து சென்ற நிகழ்ச்சியும், பிறகு தேசம் பூராவும் நடந்த பல நிகழ்ச்சிகளும் என் போன்றோர்களின் உள்ளத்திலிருந்து என்றைக்கும் மாறமுடியாது. அரசாங்கத்தின் மதிப்புப்படி, அரசியல் கைதிகள் என்று அங்கீகரிக்கப்படுவது மிகவும் குறைவு. அப்படி அங்கீகரிக்கப்பட்ட அரசியல் கைதிகள் கிட்டத்தட்ட ஒரு லட்சம் பேர்கள் பத்து மாத காலத்தில் கைதானார்கள். வெளியிடாமல், அரசாங்கம் செய்த எவ்வளவோ அக்கிரமங்கள் இன்று சொல்லி முடியாது. பேர் ஊர் தெரியாத எவ்வளவோ பேர்கள் அன்று அடி, உதை பட்டு எவ்வளவோ துன்பங்களுக்கு ஆளாகியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட பெரிய போராட்டம் நடத்திய பிறகுதான் சுதந்திரம் அடைவதற்குள்ள பாதை அமைந்தது. அந்தக் காலத்தில் போராட்டம் நடத்துவது என்பது சுலபமல்ல. அந்தக் காலத்தில் காங்கிரஸில் அங்கத்தினராக இருப்பது அவ்வளவு சுலபமல்ல. அப்பொழுது, கதர் சொக்காய் போடுவது என்பதும் சுலபமல்ல. காங்கிரஸில் அங்கத்தினராக இருப்பது என்பதே அப்பொழுது வீரத்திற்கு உரிய விஷயம். மஹாத்மா அவர்கள் எழுதினார்கள். பீரங்கிக்குப் பின்னால் நின்று பீரங்கியை முடுக்கி விட்டுச் சுடுவது வீரமல்ல. பீரங்கிக்கு எதிராக நின்று அதைச் சமாளிப்பது, குண்டு வந்து தாக்கினாலும்கூட, உயிர் போனாலும் சரி உறுதியை விட மாட்டோம் என்ற நிலையில் இருப்பதுதான் வீரம் என்று போதித்தார்கள். அந்த மரபில் தோன்றி, விடுதலை இயக்கத்தில் தனக்கு உரிய பங்கைச் செலுத்திய மகான் வேதரத்னம் அவர்கள். அவர்களது நினைவு எப்பொழுதும் இருக்குமென்றாலும், அதற்குள்ள நினைவுச் சின்னம் ஏற்படுத்த வேண்டும். விடுதலைப் போராட்டத்தில் பலர் நல்ல

[Sri M. Kalyanasundaram] [25th August 1961]

பங்கு எடுத்துக் கொண்டார்கள். அன்று விடுதலைப் போராட்டத்தில் முன் நின்று பங்கு எடுத்துக் கொண்டவர்கள் இன்று வேறுபட்ட கருத்தைக் கொண்டிருக்கலாம். அன்றைய ராஜாஜி அவர்களை நாம மறக்க முடியாது. வேதாரண்யத்திற்கு உப்பு சத்தியாகிரஹத்திற்குப் புறப்பட்ட ராஜாஜியை நான் மறக்க மாட்டேன். விடுதலை அடைந்த பிறகு அமைப்பு எப்படியிருக்க வேண்டும் என்பதில் மாறுபட்ட கருத்துக்கள் ஏற்பட்டால் அதை வெறுக்கவேண்டியதாயிருக்கலாம். 1930-ல் வேதாரண்யத்தை நோக்கி கையில் கொடியை ஏந்தி கால்நடையாகச் சென்ற ராஜாஜி, வேதரத்னம் போன்றவர்களை நான் என்றும் மறக்க மாட்டேன். அதற்குரிய நினைவுச்சின்னம் ஏற்படுத்தவேண்டும் அந்த நினைவின் சின்னமாக அவர் இந்த அவையில் இருந்து ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தார்கள். எனது கட்சியின் கொள்கையை அவர் ஒப்புக் கொள்ளமாட்டார், ஒளிவு மறைவின்றி அதை எதிர்க்கவும் செய்வார். ஆனால் என் போன்றாரிடம் மிக்க அன்பு கொண்டிருந்தார். நாலைந்து வருடங்களாக நெருங்கிப் பழக முடிந்ததற்கு காரணம், ஹாஸ்டலில் என் அறைக்கு அடுத்த அறையில் அவர்கள் இருந்தார்கள். அவர், என்னைப் போலவே அதிகாலையில் எழுந்து விடுவார்கள். சட்டசபையில் வைக்கப்படும் ஒரு காகிதத்தைக் கூட அவர்கள் படிக்காது விடுவதில்லை. என்ன நிகழ்ச்சிகள் நடக்கின்றன, என்று தொடர்ந்து அவைகளைக் கவனிப்பதில் அக்கறை கொண்டவர்கள். அரசியல் வேறுபாடு இருக்கலாம், ஆனால் அவரிடம் கற்றுக் கொள்ள வேண்டும், கடமை உணர்ச்சியை. ஒரு மாதத்திற்கு முன்னர், எங்கள் இருவருக்கும் ஒரேமாதிரி நோய் இருக்கிறது என்பதாலோ என்னவோ, ஹிருதய நோய் பற்றி என்னிடம் பேசினார்கள். சில தினங்களுக்கு முன், நான் வேதாரண்யம் போயிருந்தபோது அவரது வீட்டிற்கு நான் போகவில்லை என்று குறையாக 'ஏன் அப்படி வராது வந்து விட்டீர்கள்' என்று என்னைக் கடிந்து கொண்டார்கள். அப்பொழுது நான் தலைகுனிய நேர்ந்தது. 'அரசியல் மாறுபாடு இருப்பினும், என் வீட்டிற்கு வராமலிருந்து விட்டீர்களே' என்று கண்டித்ததை, அவரது பெருந்தன்மைக்கு உதாரணமாகத்தான் கூறினேன்.

அவரிடம் அப்போதும் சொன்னேன். 'உடல் நிலை சரியில்லை என்று சொல்லுகிறீர்களே, அப்படியானால் ஏன் இங்கு வந்தீர்கள்' என்று கேட்டேன். அவர் அதற்கு "டாக்டர்கள் கூட இங்கு வருவதை ஆட்சேபித்தார்கள். அதையும் மீறித்தான் வந்திருக்கிறேன். அப்படியே ஏதாவது நேர்ந்தாலும் நமது கடமையை செய்யும்போது அதிலும் சட்டசபையிலேயே ஏதாவது நேர்ந்து விட்டாலுங்கூட, அதை நான் பெருமையாகத்தான் கருதுவேன்", என்று சொன்னார். உண்மையிலேயே அவர் சொன்னபடி அவர் கடமையை ஆற்றிக் கொண்டிருந்த நேரத்தில் நம்மைவிட்டுப் போயிருக்கிறார். என்றையதினம் அவர்கள் பிரக்ஞையை இழந்தார்களோ அன்றைய தினம் கூட, அவர்கள் இந்தச் சபையில்

வந்து கேள்விகள் எல்லாம் போட்டார்கள். சில வாதப்பிரதி வாதங்கள் நடத்தினார்கள். அதன் பின்னால்தான் 24 மணி நேரம் கூட ஆகவில்லை, அதற்குள் ஆஸ்பத்திரியில் நம்மையெல்லாம் துக்கத்தில் ஆழ்த்திவிட்டு மறைந்து விட்டார்கள். அவருடைய கடமையுணர்ச்சியை நாம் எல்லாம் மறந்துவிட முடியாது. அவர் களுடைய மறைவினால் ஏற்பட்டிருக்கும் துக்கத்தில் நானும் எனது கட்சியும் பங்கு கொள்வதோடு, அவர்களுக்கு எங்கள் இறுதி வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

* **SRI S. PAKKIRISAMI PILLAI :** தலைவர் அவர்களே, இதர நண்பர்களுடன் சேர்ந்து நானும் சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இரண்டு நாட்களுக்கு முன்னால் கூட நம்மோடு இருந்த சர்தார் வேதரத்தினம் திடீரென்று நம்மை விட்டு மறைந்துவிட்டார் என்ற செய்தியைக் கேட்டு நம்மால் மனது கலங்காமல் இருக்க முடியாது. சர்தார் அவர்களைப்பற்றி 1935-லிருந்து எனக்குத் தெரியும். நெருங்கிய பழக்கம் இந்த நான்கு வருஷத்தில்தான். நான்கு வருஷ காலங்களுக்குள்ளாக அவர்களுடைய உயர்ந்த லட்சியங்களை என்னென்ன முறையில் நடைமுறைக்குக் கொண்டுவர முடியும் என்று கருதினார்களோ அந்தந்த முறையில் கொண்டு வந்து மற்றவர்களுக்கு வழிகாட்டி யாகவும், எல்லோரிடத்திலும் அன்புடன் பழகும் குணத்துடனும் அவர் நடந்து வந்தது அவருடைய மதிப்பை உயர்த்தியது. ஒரு சிறு நிகழ்ச்சியை எடுத்துக் கூற விரும்புகிறேன். சமீபத்தில் பப்ளிக் அக்கௌண்ட்ஸ் கமிட்டி அங்கத்தினர்கள் பிலாய், ரூர் கேலா போன்ற இடங்களுக்குப் போனார்கள். அதில் நானும் போயிருந்தேன்; அவர்களும் வந்தார்கள். பிலாய் உருக்காலை யைப் பார்த்துவிட்டு திரும்பி வந்து ரயிலில் ஏறும் போது ஒரு ஜேப்படிக்காரன் அவருடைய மடியை பிளேடினால் கீறியிருக் கிறான். அவருடைய கதர் வேட்டியை அந்த பிளேடினால் கீறி விட்டான். ஆனால் அவருடைய மணிபர்ஸைக் கிழிக்கவில்லை. நான் அவர்களுக்குப் பின்னால் ஏறுகிறேன் என்று அறிந்து கொண்டபோது அவன் ஓடிவிட்டான். நல்லகாலமாக மணி பர்ஸ் களவு போகவில்லை. அப்போது சர்தார் அவர்கள் சொன்னார்கள், "நல்லகாலமாக வயிற்றை கீறாமல் போய்விட்டான், இதெல்லாம் நம்முடைய நாட்டு சமுதாயத்தின் கோளாறுகள்தான், இதற்கு நாம் யாரை வெறுத்து என்ன பயன்" என்று சொல்லிவிட்டு பேசாமல் இருந்து விட்டார்கள். இதிலிருந்து அவருடைய தத்துவ ஞான மனப்பாங்கை நாம் தெரிந்து கொள்ள முடியும். இதைப் பார்க்கும்போது நாம் எல்லாம் ஆச்சரியப்படும்படியாக இருந்தது. எந்த மாதிரியான கால மாறுதல் ஏற்பட்டாலும் ஒரே கொள்கையில் அவர்கள் இருந்து வந்தார்கள். இந்த மாதிரி யான லட்சியக் கொள்கையுள்ளவர்கள் சிலர் தான் இருப்பார்கள். சட்டை போடுவதில்லை என்று சிலர்தான் அரசியல் தலைவர்கள் மத்தியில் இருக்கின்றார்கள். அவ்விதமிருக்கும் ஒவ்வொருவரும் மறைந்து கொண்டே வருகிறார்கள்.

[Sri S. Pakkirisamy Pillai] [25th August 1961

இவ்விதம் அரசியல் துறையில் இருக்கக்கூடியவர்கள் சிலர் தான். அந்த முறையில் தலைவராக இருந்து வந்த சர்தார் அவர்கள் மறைந்து விட்டார்கள். தூய கதர் ஆடை அணிந்து கொண்டு சட்டசபை வேலைகளில் சுறுசுறுப்பாக வேலை செய்து கொண்டிருந்த ஒரு தலைவர் அவர்களை நாம் இழந்தோம். அவருடைய மறைவினால் துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் அவருடைய குடும்பத்தாருக்கு எங்களுடைய ஆழ்ந்த, மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

* SRI M. P. SUBRAMANIAM : சட்டமன்ற உதவித் தலைவர் அவர்களே, நம்முடன் இரண்டு நாட்கள் முன்வரை இருந்த சர்தார் வேதரத்தினம் அவர்கள் மறைந்து விட்டது நமக்கெல்லாம் பெரியதொரு இழப்பு என்று தெரிவித்துக்கொள்கிறேன். சர்தார் வேதரத்தினம் அவர்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு இல்லையாயினும் அவர்களைப்பற்றி தமிழ்நாட்டிலுள்ள அரசியல் வாதிகள் அனைவரும் அறிவார்கள். பழம்பெரும் தியாகிகளில் சர்தார் வேதரத்தினம் ஒருவர் என்பதைத் தமிழ்நாடு அரசியல் வட்டாரம் நன்றாக அறியும். அவர் சட்டசபையில் 52-வது வருடத்தில் நடந்த தேர்தலைத் தவிர்த்து எல்லா தேர்தலிலும் வெற்றிபெற்று வந்திருக்கிறார். அவர்கள் சட்டசபை வேலைகளில் இளைஞர்களைப் போன்று சுறு சுறுப்பாக வேலை செய்வதைப் பார்க்கும் போது இளைஞர்களாக இருக்கின்றவர்கள் வெட்கப்பட வேண்டும். அந்த அளவுக்குச் சுறு சுறுப்பாக வேலை செய்து வந்தார். அதிலும் குறிப்பாகக் கேள்வி நேரங்களில் தினமும் அவர் எடுத்துக்கொள்ளும் முயற்சிகளை எடுத்துக் கொண்டால், அவரையொத்த வயதினர்கள் யாரும் இவ்விதம் ஊக்கத்தோடும், உற்சாகத்தோடும் வேலை செய்யவில்லை என்று நிச்சயமாகச் சொல்லலாம். அவருடைய மறைவு நமக்கு மட்டுமல்ல, தமிழ்நாட்டுக்கே பெரியதொரு இழப்பு. அவருடைய மறைவால் வருத்தமுற்றிருக்கும் அவருடைய குடும்பத்தாருக்கு தமிழ் தேசியக் கட்சியின் சார்பாக எங்கள் அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : " I also wish to associate myself with the sentiments expressed by the Hon. the Leader of the House and other Leaders of Parties. I know Sri A. Vedarathnam Pillai from the year 1937. He was born on 25th February 1897.

Sri Vedarathnam Pillai was a staunch Congressman and constructive worker. He was Secretary of the Reception Committee of the Provincial Congress Conference held at Vedaranyam in 1929 and a Member of the A.I.C.C. from 1924.

He was the Chief Organiser, Salt Satyagraha and his salt lands were confiscated and auctioned by the British Government. He played an active part in Congress movements and was imprisoned several times. He was Secretary, District Congress Committee from 1929 to 1939 and was President, Tamilnad Provincial Congress Session at Vellore.

25th August 1961] [Deputy Speaker]

He was also President of the Vedaraniam Panchayat Board and Secretary, Tanjore District Harijan Seva Sangh and Kasturba National Memorial Trust.

He was a Member of the Congress Working Committee for several years. He was a Member of the Madras Legislative Assembly from 1937 to 1952. He was elected to the present Legislative Assembly in the year 1957 from the Thiruthuraipundi-General Constituency.

He had also organized flood and cyclone relief works and was a Member of several Government Committees.

He had been the President of the Tamil Nad Branch of the Dakshina Bharat Hindi Prachar Sabha, and also of the Basic Education Committee and the Tamil Nad Provincial Salt Industrialists Association. He founded and was running the Kasturba Gandhi Kanya Gurukulam.

He has also been conducting the Tayumanavar Senior Basic School. He was also the Author of 'VEDARANYAM'.

By way of passing the resolution moved by the Hon. the Leader of the House, I request the hon. Members to stand in silence for two minutes."

The Resolution was then carried *nem con.*, all the Members standing in silence for two minutes.

DEPUTY SPEAKER : "As a mark of respect of the deceased the House will now adjourn and meet again 8-30 a.m. tomorrow."

The House then adjourned.

## II. PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. *Statutory Rules and Orders.*

335. *Notification issued with G.O. Ms. No.* 1941, *Home, dated 9th June* 1961 *amending Rules* 36 (2), 45 *and* 106 *of the Madras Cinemas (Regulation) Rules,* 1957 *published in Home Department Notification S.R.O. No. A*-701 *of* 1957, *dated* 19*th January* 1957. [*Laid on the table of the House under section* 10 (3) *of the Madras Cinemas (Regulation) Act,* 1955 (*Madras Act IX of* 1955).]

336. *Notification issued with G.O. Ms. No.* 4503, *Industries, Labour and Co-operation (Labour), dated* 11*th July* 1961 *exempting permanently the Connemara Hotel, Madras, from the provisions of section* 18 *of the Madras Catering Establishments Act,* 1958 [*Laid on the table of the House under section* 20 (4) *of the Madras Catering Establishments Act,* 1958 (*Madras Act XIII of* 1958).]